உ

சிவமயம்.




# தேவாரத்

# தோத்திரத் திரட்டு.

இஃது

கோவில்பட்டி

வேம்பத்தூர் வேளாளர் பால்ய

அபிவிருத்தி சங்கத்து

நிர்வாக சபையார் தீர்மானித்தபடி சங்க உத்தியோகஸ்

தர்கள் பொருளுதவியைக்கொண்டு

கோட்டூர் ஸ்ரீமத் இசைக்கியாடும்பெருமாள் ஞானதேசிகரின்

பாததேசகரும் மேற்படி சங்கம்

பிரசாரக ஆசிரியருமாகிய

☞ சி. வைத்திலிங்கம் பிள்ளையவர்களால்

ஒருங்கு திரட்டி

கோவில்பட்டி

...ஸ்வதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

...த்ரோத்காரி௵ வைகாசிமீ

1923

உ

சிவமயம்




# தேவாரத்
# தோத்திரத் திரட்டு.

இஃது

**கோவில்பட்டி**
**வேம்பத்தூர் வேளாளர் பால்ய**
**அபிவிருத்தி சங்கத்து**

நிர்வாக சபையார் தீர்மானித்தபடி சங்க உத்தியோகஸ்தர்கள்
பொருளுதவியைக்கொண்டு

கோட்டூர் ஸ்ரீமத் இசைக்கியாடும்பெருமாள் ஞானதேசிகரின்
பாதசேகரரும் மேற்படி சங்கம் பிரசார ஆசிரியருமாகிய
☞ **சி. வைத்திலிங்கம் பிள்ளையவர்களால்**
ஒருங்கு திரட்டி

சரஸ்வதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

ருத்ரோத்காரி௵ வைகாசிமீ
1923

உ

சிவமயம்.





# கோவில்பட்டி, வேம்பத்தூர்
# வேளாளர் பால்ய அபிவிர்த்தி சங்கம்.

தலைவர் திருமறைத்திருவன் மது. ராமையா பிள்ளையவர்கள்

உதவித்தலைவர் திருமறைத்திருவன் சி. அருணாசலம் பிள்ளையவர்கள்.

## நிர்வாக சபையார்கள் 19-4-23ல் பிறப்பிவித்த தீர்மானம்.

மூன்றுவதாண்டு நிறைவு விழாவுக்குள் (ருத்ரோத்காரி வருஷ முடிவுக்குள்) மாணவர்கள் மனனம் செய்யவேண்டிய பாடக் குறிப்பு. அறிக்கைப்பத்திரம்.

"வருதியானைப் பல்வேறு சமயங்கள்
கரிதியானைக் கண்டார் மனமேவிய
பிரிதியானைப் பிறரறியா ததோர்
கருதியானைக்கண்டீர் தொழற் பாலதே"

<u>சங்க வரலாறு</u>:— மக்கள் நல் வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் சிறந்த உதவிகளில், மாணவர்கள் செய்யும் உதவி ஒன்றும். அத்துணைப் பொறுப்புள்ள தொழிலை மேற்கொள்ளுவோர் அரும் பெருங் குணம்பல அமையப் பெற்றோராயிருத்தல் அவசியம். இவ்வுண்மையையும் உணர்ந்தே நாடெங்கும் சமயக் கல்வியறிவைப் பரப்பப்பாடுபடும் நம் பெரியார் கல்விச்சங்கங்களை ஆங்காங்கு ஏற்படுத்திப்பலனை ஆசிரியர் தொழிலுக்கு அருகராக்க முயன்றுவருகின்றனர். இவற்றினுக் விளையும் நன்மைகள் உரம்பெற்று வளர்வது கருதி இத்தகைய சங்கங்கள் ஒவ்வொன்றிலும்

சமயக்கல்வி பயிலும் மாணவர்களின் சங்கமென்றம் நடைபெற ஏற்பாடு செய்திருக்கின்றனர். இம்முறையில்தான் 17-10-20ல் இச்சங்கம்தோன்றி நிலவி வருகின்றது.

சங்க நோக்கங்கள்:- 1. அங்கத்தவரைக் கல்விகேள்விகளிலும், சொல் வன்மையிலும் வல்லவராக்குதல்.

2. அவர்களுக்குள் நல்லொழுக்கமும், தெய்வப்பற்றும், அன்பும், ஒத்துழைப்பும், வளரச்செய்தல்;

3. அவர்கள் தொழிலின் கடமைகளையும் உரிமைகளையும் உணர்ந்து சான்றோர் மதிக்கும்வண்ணம் தமது தொழிலை நடத்தி இன்புறுமாறு அவர்களைத் தூண்டல்.

## இந்நோக்கங்கள் நிறைவேறக் கையாளப்படும் முறைகள்:—

1. பயன்தரும் விஷயங்களைக்குறித்து அங்கத்தினர் கட்டுரை எழுதி வாசித்தலும், சொற்பொழிவு செய்தலும்;

2. தக்கார் தலைமையின் கீழ்முறைப்படி தருக்கஞ்செய்தல்;

3. நல்லபத்திரிகைகளையும் நூல்களையும் வருவித்து வாசித்தல்;

4. அயலிடத்து அறிஞர்களையும் வரவழைத்து அவர்கள் அறிவுரைகளைக் கேட்டல்.

சங்க அங்கத்தினர் :— இச்சங்கத்தில் பயிலும் குலமாணவர், பெரியார் அனைவரும் இச்சங்கத்தின் அங்கத்தினராவர்.

சங்க காரிய நிர்வாகம் :— சங்கத்தின் வேலைகள் யாவும் கீழ்க் குறித்துள்ள இருபது பெயர்கள் கூடிய நிர்வாக சபையில் கவனிக்கப்பட்டு வருகின்றன —

(1) தலைவர்) (2) உதவித்தலைவர் (3) காரியதரிசி (4) உதவிகாரியதரிசி (5) பொருட்காப்பாளர் (6 உதவிப்பொருட் காப்பாளர் (7) கணக்குப் பரிசோதகர் (8) ஆசிரியர் (9) பிரசார ஆசிரியர் (10, இதரநிர்வாக அங்கத்தினர் பதின்மர்.

## சங்க உத்தியோகஸ்தர்கள்.

### தலைவர்

திருமறைத்திருவன் மது. ராமையா பிள்ளை அவர்கள்

திருமறைத்திருவன் சி. அருணாசலம்பிள்ளை அவர்கள் உபதலைவர்
திருவாளர் மு. ஆறுமுகம் பிள்ளை ,, காரியதரிசி
,, கந்தப்ப பிள்ளை ,, உதவிக்காரியதரிசி
,, கணபதியா பிள்ளை ,, பொருட்காப்பாளர்
,, செண்பகநாத பிள்ளை ,, உதவிபொருட்காப்பாளர்
,, வை. கோமதிநாயகம்பிள்ளை ,, கணக்குப் பரிசோதகர்

ஆசிரியர்

திருமறைத்திருவன் செண்பகானந்தமுத்துப்பிள்ளை அவர்கள்

பிரசார ஆசிரியர்

,, சி. வைத்திலிங்கம் பிள்ளையவர்கள்

நிர்வாக அங்கத்தினர்,

(1) திருவாளர் ரா. பாண்டியம் பிள்ளை அவர்கள்
(2) ,, சுப்பையா பிள்ளை ,,
(3) ,, செ. சொக்கையா பிள்ளை ,,
(4) ,, பி. பிச்சையா பிள்ளை ,,
(5) ,, பா. கிருஷ்ண பிள்ளை ,,
(6) ,, பூவையா பிள்ளை ,,
(7) ,, கு. நமசிவாயம் பிள்ளை ,,
(8) ,, ஆ. நாராயண பிள்ளை ,,
(9) ,, கு. சிவசங்கரம் பிள்ளை ,,
(10) ,, சி. குருசாமி பிள்ளை ,,
(11) ,, சகாதேவ பிள்ளை ,,



உ

சிவமயம்.

# தேவாரத்தோத்திரத்திரட்டு.

## கணபதி வணக்கம்.

திருச்சிற்றம்பலம்

பிடியத னுருவுமை கொளமிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடுமவரிடர்
கடிகணபதி வரயருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறையிறையே.



## சுப்பிரமணியர் வணக்கம்.

திருச்சிற்றம்பலம்

சமர சூரபன்மாவைத் தடிந்தவேல்
குமரன் றந்தைநற் கோளம்பமேவிய
அமரர் கோவினில் அன்புடைத் தொண்டர்கள்
அமரர்லோகம தாளுடை யார்களே.



## சமையாச்சாரியார் நால்வர் வணக்கம்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக்கன் மிதப்பிலமர்ந்த பிரானடி போற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத்தாள் போற்றி.

## திருஞானசம்மந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருப்பாடல்.

திருச்சிற்றம்பலம்.

தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண்மதிசூடி
காடுடைய சுடலைப்பொடி பூசியென் னுள்ளங்கவர்கள்வ
னேடுடைய மலரான்முனநாள்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே (1)

முற்றலாமையிளநாக மோடேனமுளக்கொம்பை வைபூண்டு
வற்றலோடு கலனாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடையார் பெரியார்கழல் கையாற்றொழுதேத்த
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே (2)

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
யொருநெறியமனம் வைத்துணர் ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே. (3)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த திருப்பாடல்.

திருச்சிற்றம்பலம்.

கூற்றாயினவாறு விலக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியே
னேற்றாயடிக்கே யிரவும்பகலும் பிரியாது வணங்குவ னெப்பொழுதுந்
தோற்றாதென் வயிற்றினகம்படியே குடரோடு தொடக்கிமுடக்கியிட
ஆற்றேனடியே னதிகைக்கெடில வீரட்டானத்துறையம்மானே (1)

நெஞ்சமுமக்கே யிடமாகவைத்தே னினையாதொருபோது மிருந்தறியேன்
வஞ்சமிது வொப்பது கண்டறியேன் வயிற்றோடு துடக்கிமுடக்கியிட
நஞ்சாகிவந்தெனை நலிவதனை நணுகாமற்றுறந்து கரந்துமிட
யஞ்சேலுமென்னீரதிகைக் கெடில வீரட்டானத்துறையம்மானே (2)

போர்த்தாயங் கோரானையினீருரி தோல்புறங்காடரங்கா நடமாடவல்லா
யார்த்தானரக்கன்றனை மால்வரைக்கீழடர்த்திட்டருள்செய்தவது கருதாய்
வேர்த்தும்புரண்டும் விழுந்துமெழுந்தா லென்வேதனையான விலக்கியிடா
யார்த்தார்புனல்சூழதிகைக் கெடில வீரட்டானத்துறையம்மானே.

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருப்பாட்டல்

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடி பெருமானே யருளாளா
வெத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை,
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட்டுறையு
ளத்தா வுனக்காளா யினியல்லே னெனலாமே (1)

நாயேன் பலநாளு நினைப்பின்றி மனத்துன்னை
பேயாய்த் திரிந்தெய்த்தேன் பெறலாகாவருள் பெற்றேன்
வேயார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட்டுறையு
ளாயா வுனக்காளா யினியல்லே னெனலாமா. (2)

காரூர் புனலெய்திக் கரைக் கல்லித்திரைக் கையாற்
பாரூர் புகழெய்தித் திகழ் பண்மாமணியுந்தி
சீரூர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட்டுறையு.
ளாரூர னெம்பெருமாற் காளல்லே னெனலாமே (3)

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

எல்லாவுலகமுமானாய் நீயே யேகம்பமேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மையறிவாய் நீயே ஞானச்சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லாவினைகளறுப்பாய் நீயே புகழ்ச்சேவடி யென்மேல்வைத்தாய்நீயே
செல்வாய் செல்வந்தருவாய்நீயே திருவையாறகலாத செம்பொற்சோதீ 1

திருச்சிற்றம்பலம்.

ஒருவனாயுலகேத்த நின்றநாளோ வோருருவே மூவுருவமானநாளோ
கருவனாய் காலனை முன்காய்ந்தநாளோ காமனையுங் கண்ணழலால் விழித்தநாளோ
மருவனாய் மண்ணும்விண்ணுந் தெரித்தநாளோ மான்மறிக்கையேந்தியோர் மாதோர்பாகந்
திருவினான் சேர்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்டநாளே 2

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தந்தையார் தாயாருடன் பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தாமாரே
வந்தவாறெங்ஙனே போமாறேதோ மாயமாமிதற் கேதுமகிழவேண்டா
சிந்தையீருமக்கென்று சொல்லக்கேண்மின் திகழ்மதியும்வாளரவுந் திளைக்குஞ்சென்னி
யெந்தையார் திருநாம நமச்சிவாய வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே, 3

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சரத்தினம்.

## தேவாரம் திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக் கைமடமானி
பங்கயச்செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழலுருவன் பூதநாயகனால் வேதமும் பொருள்களுமருளி
யங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்த வாலவாயாவதுமிதுவே. 1

## திருவாசகம்.

சோதியே சுடரே சூழொளி விளக்கே சுரிகுழற்பணைமுலைமடந்தை
பாதியேபரனே பால்கொள் வெண்ணீற்றாய் பங்கயத்தயனுமாலறியா
நீதியே செல்வத்திருப்பெருந்துறையி னிறைமலர்க் குருந்தமேவியசீ
ராதியே யடியேனாதரித்தழைத்தா லதெந்துவேயென் றருளாயே 2

## திருவிசைப்பா.

கற்றவர்விழுங்குங் கற்பகக்கனியைக் கரையிலாக் கருணைமாகடலை
மற்றவரறியா மாணிக்கமலையை மதிப்பவர் மனமணிவிளக்கை
செற்றவர்புரங்கள் செற்றவெஞ் சிவனைத் திருவீழிமிழலைவீற்றிருந்த
கொற்றவன்றன்னைக் கண்டுகண்டுள்ளங் குளிரவென்கண் குளிர்ந்தனவே. 3

## திருப்பல்லாண்டு.

பாலுக்குப் பாலகன்வேண்டியழுதிட பாற்கடலீந்தபிரான்
மாலுக்குச் சக்கரமன்றருள்செய்தவன் மன்னியதில்லைதன்னு
ளாலிக்கு மந்தணர்வாழ்கின்ற சிற்றம்பலமே யிடமாக
பாலித்துநட்டம் பயிலவல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே 4

## திருப்புராணம்.

ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள வளப்பருங் கரணங்கணான்கும்
சிந்தையேயாக குணமொருமூன்றும் திருந்துசாத்விகமேயாக
இந்துவாழ் சடையானாடு மானந்தவெல்லையிற் றனிப்பெருங்கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துட்டிளைத்து மாறில்லா மகிழ்ச்சியின்மலர்ந்தார் 5

திருச்சிற்றம்பலம்.

# திருப்புகழ்.

கருவினுரு வாகிவந்து வயதளவி லேவளர்ந்து கலைகள்பல வேதெரிந்து மதனாலே, கரியகுழல் மாதர்தங்க ளடிசுவடு மார்புதைந்து கவலைபெரி தாகிநொந்து மிகவாடி, அரகரசிவாயவென்று தினமு நினையாமனின்று மறுசமய நீதியென்று மறியாம, வசனமிகு வார்கடங்கள் மனைகடலைவாச னின்று மனுதினமு நாணமின்றி யழிவேனோ, உரகபட மேல்வளர்ந்த பெரியபெருமாளரங்க ருலகளவு மால்மகிழ்ந்த மருகோனே, வுபயகுல தீபவங்க விருதுகவி ராஜசிங்க முறைபுகலியூரிலன்று வருவோனே; பரவைமனை மீதிலன்று ஒருபொழுது தூதுசென்று பரமனருளால்வளர்ந்த குமரேசா, பகையசுரர் சேனைகொன்று வமரர்சிறை மீளவென்று பழனிமலை மீதினின்ற பெருமாளே. (1)

தீயும்பவனமு நீருந்தரணியும் வானுஞ் செறிதருப்சுபாச; தேகந்தனை நிலையேயென் றிருவினை நீருந்திறவினை யறியாதே, ஓயும்படியறு நூறும் பதுமுதல் நூறும்புதினிரு பதினூறு, மோடுஞ்சிறு வுயிர் மீளும்படி கலை யோகம்புரிவது கிடையாதே, வேயுங்கணியும் விளாவும்படி புனமேவுஞ் சிறுமிதன் மணவாளா, மீனம்படுகட லேழுந்தழலெழ வேதங்கதறுட வொருநாளும், வாயுங்குலகிரி மாவுந்தொளைபட மாகந்தமதில் மறைசூரன், மார்புந்துணை புறதோளுந் துணிபடவாள் கொண்டமர்செய்தபெருமாளே 2

கருப்பத்தூறிப்பிறவாதே, கனக்கப்பாடுற் றுழலாதே, திருப்பொற்பா சத்தனுபூதி, சுறக்கப்பாலித் தருள்வாயே, பரப்பற்றருக் குரியோனே, பரத்தைப் பாலுக்கணியோனே, திருக்கைச்சேவற் கொடியோனே, செகத்திற் சோதிப்பெருமாளே. 3

## ஸ்ரீ சங்கராச்சாரியார் குருவணக்கம்.

திங்களுஞ் சீதக் கங்கையுமணிந்த செஞ்சடைச் சம்புவேசிவர்
பங்கமாம் பிறவிக்கடலிடையழுந்தாவண மிப்பாரில் மீதெழுந்து
புங்கனல் லானந்தந்து எவ்வுயிரையும்புரப்பவன் தானெனக்குறிக்கும்
சங்கரபகவத் பாதனன்னு மந்திரித்த சத்குருசரண் சரணே.

## ஸ்ரீ சுந்தர குருவணக்கம்.

கணபதியாய்க் கந்தனாய்க் கைலாயபதியாகி கௌரியாகி
மணமிறை தாமரையில்வளர் மறையவனாய் மாலாகி மற்றுமுள்ள [ல்லாக்
கணங்களாய்க் காண்பவனாய்க் காட்சியாய்க்காண் பொருளாய்க்கருதமெ
குணங்களாய்க் குணங்கடந்த குருவான சுந்தரனைக்குறித்து வாழ்வாம்

வாழிமாமறை வாழிசத் சங்கமும்
வாழிசுந்தர சத்குருமாவடி
வாழியன்பர் பரம்பரை யோதுதல்
வாழியென்னாளும் யென் வாழியென்னாளுமே.

திருச்சிற்றம்பலம்.

## திருவள்ளுவர் திருவாய்மொழி.

1. அகாமுதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு
2. எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு
3. கெருநல் உளன் ஒருவன் இன்றில்லை, என்னும்
பெருமையுடைத்திவ்வுலகு
4. அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல், நான்கும்
இழுக்கா இயன்றது அறம்
5. அறிவுடையார் எல்லாமுடையார், அறிவிலார்
என்னுடையரேனும் இலர்
6. யாதானும் நாடாமல், ஊராமல் என் ஒருவன்
சாந்துணையுங் கல்லாதவாறு
7. கற்றிலனாயினுங்கேட்க; அஃதொருவற்
கொற்கத்தின் ஊற்றாந்துணை
8. கற்றதனா லாயபயனன்கொல், வாலறிவன்
நற்றாள்தொழா அர் எனின்?
9. கற்க கசடறக் கற்பவை; கற்றபின்,
நிற்க அதற்குத்தக
10. உலகத்தோடொட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லார் அறிவிலாதார்
11. இல்வாழ்வானென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றில் நின்றதுணை

12. அவையறிந்தாராய்ந்து சொல்லுக: சொல்லின்
தொகையறிந்த தூய்மையவர்

13. ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையாரில்

14. ஒழுக்கம் விழுப்பந்தரலான், ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப்படும்

15. மனத்துக்கண் மாசிலனாதல், அனைத்தறன்;
ஆகுல நீரபிற

16. சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டுபவர்

17. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்கணி

18. எதிலார்குற்றம்போல் தங்குற்றம்காண்கின், பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு?

19. அன்பின் வழியதுயிர்நிலை; அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு

20. அறிவினன் ஆகுவதுண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றக்கடை?

21. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்தவன்கேடு,

22. இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்.
என்னபயத்தோ சால்பு?

23. யாமெய்யாக்கண்ட வற்றுளில்லை, எனைத்தொன்றும்
வாய்மையினல்லபிற

24. ஒன்றாக நல்லது கொல்லாமை; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று

25. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப்படும்

26. அரியவற்றுளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித்தமராக் கொளல்

27. பரியினு மாகவாம் பாலல்ல; உய்த்துச்
சொரியினும் போகாதம

28. எண்ணிய எண்ணியாங்கெய்துப; எண்ணியார்
திண்ணியராகப்பெறின்

29. தெய்வத்தானுகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலிதரும்

30. உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து

31. செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்

32. அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையோ,
டைந்து சால்பூன்றியதூண்

33. அல்லவைதேய அறம்பெருகும் நல்லவை
நாடி யினியசொலின்

34. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதாநட்பு

35 நன்றிமறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றேமறப்பது நன்று

36. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம் உயவு இல்லை
செய்நன்றி கொன்றமகற்கு

37. அகழ்வாரைத் தாங்குநிலம் போலத்தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தல்தலை

38. செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கிலென் காவாக்காலென்

39. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்டவடு

40 அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்துவிடும்.

ஓம் தத்ஸத்.

குறிப்பு:— இச்சங்கத்திலிருந்து சங்கத்தினர் அபிவிருத்தியின்பொருட்டு துண்டுப்பத்திரிகைகள் வாயிலாகவும்

மேற்படி சங்கத்துப்பிரசார அசிரியர், திருமறைத்திருவன்,

சி. வைத்திலிங்கம் பிள்ளையவர்களால்

வெளியூர்களுக்குச்சென்று செய்யப்படும் உபந்நியாசங்களைக்கேட்டும் அதன்படி நடந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

